Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**பேச்சு**

பேசும் பொருளைப் பயன்படத் தக்கதாகவும், வீணான வம்புக்கு வித்திடாத வகையிலும் அமைத்துக் கொள்வது நல்லது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**இலக்கியம்**

இலக்கியம் என்பது நாகரிகத்தைப் புகட்ட வேண்டும். மக்களிடம் உரிய குணங்களைப் புகுத்துவதாக இருக்க வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 8 - 3 - 83 செவ்வாய் வெளியீடு 9 - 3 - 83 புதன் இதழ்: 139

### பெட்ரோல் லாரி

# தீவிபத்தில் இறந்தோர் குடும்பத்துக்கு உதவி: அரசு பரிசீலனை

## அமைச்சர் முத்துசாமி தகவல்

**சென்னை, மார்ச். 8- சென்னை அருகே பெட்ரோல் லாரி தீப்பிடித்து எரிந்ததில் இறந்தவர்கள் குடும்பத்திற்கு நிதியுதவி அளிப்பது குறித்து அரசு பரிசீலிக்கும் என அமைச்சர் முத்துசாமி அறிவித்தார்.**

சென்னை, அருகேயுள்ள வானகரத்தில் உயர்சக்தி பெட்ரோல் ஏற்றி வந்த லாரி கவிழ்ந்து தீ விபத்து ஏற்பட்டு 39 பேர் இறந்தது குறித்து சட்டசபையில் உறுப்பினர்கள் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டுவந்தனர்.

அதற்கு பதிலளித்து அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:

28-2-83 ந்தேதி பிற்பகல் 2- 45 மணிக்கு வானகரம்அருகே பள்ளிக்குப்பத்தில் 'ஸ்பிரிட்' ஏற்றிவந்த ஒரு லாரி பின்னால் வந்த வண்டிக்கு வழிவிட ஒதுக்கியபோது கவிழ்ந்தது.

அது கவிழ்ந்தவுடன் அருகே வேலை செய்துகொண்டிருந்த இருவர் ஒழுகிய பெட்ரோலை பிடிக்கப் போனார்கள்.

அப்போது தீ விபத்து ஏற்பட்டு டாங்கு வெடித்தது. பின்னர் தீ விபத்தினால் 6 பெண்கள் இறந்தனர்.

50 பேருக்கு தீக்காயம் ஏற்பட்டது. அவர்கள் நகரில் உள்ள அரசு மருத்துவமனைகளில் அனுமதிக்கப்பட்டனர்.

### தீவிர சிகிச்சை

சுகாதார அமைச்சர் மருத்துவமனைகளுக்குச் சென்று பார்த்து தீவிர சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார் அதிகாரிகளும் ஆவன செய்தனர். தீ விபத்து நடந்த இடத்தில் உடனடியாக மீட்புப் பணியில் தியணைப்பு படையினரும் காவல் துறையினரும் ஈடுபட்டனர்.

இந்த விபத்தில் இதுவரை 39 பேர் இறந்துள்ளனர். இதில் 18 பேர் பெண்கள்.

6 பெண்களும் 11 ஆண்களும் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

லாரியை ஓட்டிய தர்சன்சிங் கைது செய்யப்பட்டுள்ளார்.

இறந்தவர்களின் உறவினர்களுக்கு இழப்பீடு வழங்க அரசுநடவடிக்கைஎடுத்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.



மேலவை உறுப்பினராக 'தாய்' ஆசிரியர் வலம்புரி ஜான் பதவியேற்ற போது எடுத்த படம்.

### போக்குவரத்துக் கழகத்துக்கு

# காமராஜர் பெயரை வைக்க இ. காங்கிரஸ் எம். எல். ஏ. எதிர்ப்பு

**சென்னை, மார்ச். 8- போக்கு வரத்துக் கழகத்துக்கு காமராஜர் பெயரை வைக்க வேண்டாம் என்று இ காங்கிரஸ் எம்.எல்.ஏ. சுந்தரராசன் கூறினார்.**

சட்ட சபையில் நிதி நிலை அறிக்கையின் மீதான விவாதத்தில் இ. காங்கிரஸ் உறுப்பினர் சுந்தரராஜன் பேசுகையில் கூறியதாவது:

போக்குவரத்துக் கழகத்திற்கு காமராஜரின் பெயரை வைப்பதாக சொன்னீர்கள் உங்கள் கையால் பெயர் வைக்க வேண்டாம்.

காமராஜரை நீங்கள் அவமானப்படுத்தி விட்டீர்கள் தயவு செய்து நீங்கள் காமராஜர் பெயரை வைக்க வேண்டாம்.

(நாஞ்சில் வின்செண்ட் (கழகம்):— எழுந்து காமராஜருக்கு எதிராக தோன்றியது தான் இந்திரா காங்கிரஸ்...

அப்போது இந்திராகாங்கிரஸ் சித்தன் இதற்கு ஆட்சேபம் தெரிவித்தார், பின்னர் விஸ்வநாதன், கே. பி. ராமலிங்கம் ஆகியோர் எழுந்து வின்செண்ட் சொன்னதில் என்ன தவறு இருக்கிறது, அவர்சொன்னது சரிதான் என்றனர். மீண்டும் சித்தன் மற்றும் காங்கிரசார் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர்.)

அமைச்சர் நாவலர்:— காமராஜர் பெயரை வைக்க வேண்டாம் என்பது அவருடைய கருத்து. வைக்கக்கூடாது என்பது அவரது விருப்பம். காமராஜர் பெயரை வைகக வேண்டும்என்பது நமது கருத்து. காமராஜருக்கு இந்த அரசு என்னென்ன செய்திருக்கிறது என்று தெரியும். காமராஜரின் வீட்டை நினைவாலயம் ஆக்கியிருக்கிறோம்.

இந்தவரலாற்றை சொல்ல வேண்டுமா?

30 ஆண்டுகாலம் நடந்த வரலாற்றை சொல்ல முடியும்.

இவ்வாறு நிதி அமைச்சர் நாவலர் கூறினார்

தொடர்ந்து நிதிநிலை விவாதத்தின்மீது கோவைத்தம்பி (கழகம்) பேசுகையில் கூறியதாவது.

காமராஜரின் பெயரை போக்குவரத்து கழகத்திற்கு வைக்கக் கூடாது என்று கூறுகிறார். காமராஜர் பெயரை இந்தியாவில் எந்தப் பகுதியிலாவதுவைத்திருக்கிறீர்களா? காமராஜர் உயிரோடு இருந்தபோது அவர் தலைவர் என்று கூறியவர் தான் புரட்சித்தலைவர்

காமராஜர் தனது இறுதி காலத்தில் எவ்வளவு துயரத்தோடு இருந்தார் என்பது தெரிந்த விஷயம். அப்போது காமராஜரைக் கடுமையாக எதிர்த்தவர்கள் இப்போது காமராஜர் பெயரை நாம் வைக்கக்கூடாது என்று கூறுகிறார்கள்.

சித்தன் (இ. காங்கிரஸ் குறுக்கீடு):— காமராஜருக்கு தேசிய காங்கிரஸ் துரோகம் செய்தது என்று உறுப்பினர் கூறுகிறார். அதை அவர் நிரூபிக்க வேண்டும். அல்லது வாபஸ் பெறவேண்டும்,

### நிரூபிக்க தயார்

கோவைத்தம்பி:—69ம் ஆண்டு பெங்களூர் கண்ணாடி மாளிகை சம்பவத்திலிருந்து காமராஜரின் கடைசி காலம் வரை நடந்தவற்றை சு.வி. கே. சம்பத் மூலம் நான் அறிந்தவன். அவைகள் எல்லாம் எனக்கு தெரியும். நிரூபிக்கத் தயாராக இருக்கிறேன்,

இ.காங்கிரஸ்சித்தனும், பலராமனும் ஆட்சேபம் தெரிவிக்க எழுந்தனர்.

துணை சபாநாயகர் பி. எச். பாண்டியன்:— உட்காருங்கள், அவர் நிருபிக்கிறேன் என்று கூறி விட்டார். பத்திரிக்கைகளில் வந்ததைத் தான் காட்டி நிருபிக்க முடியும். இவைகளுக்கெல்லாம் 'டாக்குமெண்ட்' எதுவும் கிடை

(6-ம் பத்தி பார்க்க)

★ குடிநீர் குழாய்களில் துளைகள் போட முயற்சி

★ நேரிடை இணைப்பு மூலம் தண்ணீர் திருட்டு

## சமூக விரோதிகட்கு குடிநீர் வழங்கு வாரியம்

# கடும் எச்சரிக்கை

## தவறு கண்டால் தகவல் தர கோரிக்கை

**சென்னை, மார்ச். 8- குடி நீர்ப் பற்றாக் குறையைப் பயன்படுத்தி சட்டத்துக்கு புறம்பான வழிகளில் செயல்பட்டு தண்ணீர் திருடும் சமூக விரோதிகளுக்கு சென்னை பெருநகர குடிநீர் வழங்கு வாரியம் கடும் எச்சரிகை விடுத்துள்ளது.**

சென்னை பெருநகர குடிநீர் வழங்கும்வாரியம் வெளியிட்டுள்ள ஒருஅறிக்கையில் கூறியிருப்பதாவது:—

கடந்த 2 ஆண்டுகளாக தொடர்ந்து பருவ மழை தவறியதால் சென்னைக்கு குடிநீர் வழங்கும் நீர் நிலையங்களில் தேக்கம் குறைவாக இருந்தது. எனவே 21-2-83 முதல் ஒருநாள் விட்டு ஒரு நாள் குடிநீர் வழங்கும் முறையைக் கொண்டு வரும் நிலை ஏற்பட்டது.

இதன் காரணமாக மக்களுக்கு ஏற்பட்டுள்ள அசவுகரியங்களுக்கு சென்னை குடிநீர் வாரியம் தனது வருத்தத்தை தெரிவித்துக் கொள்வதுடன் கிடைக்கும் குடிநீரை குடிப்பதற்கும் சமையலுக்கும் மட்டும் பயன் படுத்திக் கொண்டு ஏனைய மற்றக்காரியங்களுக்கு கிணற்று நீரை பயன்படுத்துமாறு பொதுமக்களை மிகவும வேண்டிக் கொள்கிறது.

### 137லாரிகள் மூலம் குடி தண்ணீர்

ஒரு நாள் விட்டு ஒரு நாள் குடி நீர் வழங்கும் முறை ஏற்படுத்தப்பட்டு இருப்பினும் குடிசைப் பகுதிகளில் வாழும் மக்களுக்கும் மற்றும் தண்ணீர் சரியாக கிடைக்காத பகுதியில் வாழும் மக்களுக்கும் 137 லாரிகளின் மூலம் ஆங்காங்கே அமைக்கப்பட்டுள்ள 1646 நீர்த்தொட்டிகளில் குடிநீர் நிரப்பப்பட்டு ஒவ்வொரு நாளும் வழங்கப் பட்டு வருகிறது.

இது தவிர குடிநீர் தட்டுப்பாடு உள்ள பகுதிகளில் டிராக்டர்களின் மூலம் தினசரி குடிநீர் வழங்கப் பட்டு வருகிறது.

பருவமழை தவறியதன் காரணமாக ஏற்பட்டுள்ள அசவுகரியங்களை நகர மக்கள் புரிந்து கொண்டு பொறுத்துக் கொண்டதற்காக சென்னை குடிநீர் வாரியம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

ஆனால்கடந்த2வாரங்களாக அங்காங்கே ஒரு சில சமூக விரோத நிகழ்ச்சிகள் நடைபெற்று இருப்பது குடிநீர் வாரியத்தின் கவனத்திற்கு வந்திருக்கின்றது.

### சமூக விரோதிகட்கு எச்சரிக்கை

சில சமூக விரோதிகள் சட்டத்திற்குப் புறம்பாக குடிநீரைப் பெற எண்ணி குடிநீர்க் குழாய்களில் துளைகள் போட முயற்சித்துள்ளனர்.

இதுபோன்ற செயல்கள் வாரியத்தின் கவனத்திற்கு கொண்டுவரப்பட்டு காவல் துறையின் உதவியுடன் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன.

இப்படிப்பட்ட காரியங்களால் சீரான குடிநீர் வினியோகம் பாதிக்கப்படுவதுடன் குடிநீரில் மற்ற அசுத்தங்கள் வந்து கலப்பதற்கும் ஏதுவாக இருக்கின்றன.

இதுபோன்ற தவறான செயல்களைத் தவிர்க்க குடிநீர் வழங்கு அலுவலகர்கள் நகர் முழுவதும் கவனித்து வருகின்றனர்.

பொது மக்களும் இது போன்ற சமூக விரோத செயல்களைக் காணும் போது உடனடியாக குடிநீர் வாரியத்திற்கு தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

சில வீடுகளில் குடிநீர் குழாய்களில் மின்சார மோட்டர்களை இணைத்து நேரிடையாக குடிநீர் உறிஞ்சி எடுக்கப் படுவது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

இந்த முறை சட்டத்திற்கு விரோதமானதாகும்.

மேலும் இதனால் பக்கத்தில் உள்ள வீடுகளுக்கு சமமாகக் குடிநீர் வழங்குவது பாதிக்கப் படுகிறது.

### தவறு செய்பவர் மீது கடும் நடவடிககை

குடிநீர் வாரிய அலுவலகங்கள் நகரத்தின் சில பகுதிகளில் திடீர் சோதனை நடத்தி இதுபோன்ற தவறுகள் நடக்கும்வீடுகளில் குழாய் இணைப்புகளை உடனே துண்டித்துள்ளனர்.

இத்தகைய தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டால் சம்மந்தப்பட்ட வீடுகளில் உள்ள இணைப்புகள் உடனடியாக துண்டிக்கப் படுவதுடன் மறு இணைப்பு குடிநீர் நிலைமை சீரடைந்த பின்னரே அளிக்கப்படும்,

ஒரு சிலர் புதிதாக குடிநீர் தொட்டிகள் நிறுவுவதற்கும் ஏற்கனவே நிறுவப்பட்ட தொட்டிகளுக்கு இரண்டாவது முறை நீர் நிரப்புவதற்கும் கீழ்ப்பாக்கம் குடிநீர் வழங்கும் நிலையம் அண்ணா பூங்கா தென் சென்னை நீர் வழங்கும் நிலையம் ஆகிய இடங்களுக்கு கோரிக்கைகளோடு செல்கிறனர்.

இந்தப் பகுதிகள் பாதுகாக்கப்பட்ட பகுதிகளாகும்.

உத்தரவில்லாமல் இந்தப் பகுதிகளில் நுழைபவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்.

மேலும் இந்த இடங்களில் பணியாற்றும் ஊழியர்களுக்கு புதியதொட்டிகள் வைக்க அதிகாரம் கிடையாது.

எனவே பொதுமக்கள்

(4-ம் பக்கம் பார்க்க

(8.ம் பத்தி தொடர்ச்சி)

யாது. நாட்டுக்கு நீங்கள் சொல்லித்தான் விளங்க வைக்கவேண்டும் என்பது இல்லை. நடந்த சம்பவங்கள் நாட்டிற்கு தெரியும்.

கோவைத்தம்பி: காமராஜர் பெயரை வைக்கக் கூடாது என்று சொல்பவர்கள் நாட்டுச் சம்பவங்களைச் சொல்லும் போதுஆத்திரம் கொள்கிறார்கள்.

மேலும் கோவைத்தம்பி தொடர்ந்து பேசினார்.

### 10-ந் தேதி சென்னையில் நடக்கிறது:

# புரட்சித்தலைவர் தலைமையில் ப. உ. ச. மகன் திருமணம்

சென்னை, மார்ச் 8— கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. அவர்களின் மகன் ராஜா என்ற செல்வம் பி. எஸ். சிக்கும். லாலாப்பேட்டைகிருஷ்ணமூர்த்தி அவர்களின் மகள் காயத்ரிக்கும் இம்மாதம் 10-ந்தேதி சென்னை ஆபட்ஸ்பரி மாளிகையில் திருமணம் நடைபெறுகிறது.

10-ந் தேதி காலை 9 மணிக்கு மேல் 10-30 மணிக்குள் நடைபெறும இந்தத்திருமண விழாவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள் தலைமை வகிக்கிறார்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர். மேலவைத் தலைவர் ம. பொ. சி., பேரவைத் தலைவர் ராசாராம், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன் கே.ஏ.கே., எஸ்.டி.எஸ், ஆர்.எம்.வீ, அரங்கநாயகம், காளிமுத்து, பொன்னையன், குழந்தை வேலு, ராகவானந்தம், டாக்டர் அண்டே, ராஜாமுகமது, முத்துச்சாமி, திருநாவுக்கரசு, எஸ் என். ராஜேந்திரன், விஜயசாரதி, கோமதி சீனிவாசன், கழகப் பொருளாளர் மாதவன், குன்றக்குடி அடிகளார், நீதிபதி கோகுலகிருஷ்ணன் ஓய்வு பெற்ற நீதிபதி பி. எஸ். சோமசுந்தரம், நீதிபதி இரத்தினவேல் பாண்டியன், செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம், சௌந்தர கைலாசம், மதுரை முத்தண்ணன், சத்திய வாணி முத்து ஆகியோர் வாழ்த்துரை வழங்குகிறார்கள்.

தலைமைக் கழக அறிக்கை எண்: 10/83

## கழகத்தோழர்கள் கவனத்துக்கு...

1972 ம் ஆண்டு கழகம் ஆரம்ப காலத்தில் உறுப்பினர்களாகப்பதிவு செய்துகொண்டவர்களில் சிலர் உறுப்பினர்களாக மீண்டும் புதுப்பிக்காமல் விடுபட்டுள்ளார்கள்.

அத்தகையவாகள் உடனடியாக கழக உறுப்பினர்களாகப் பதிவு செய்து புதுப்பித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்

ஏற்கனவே ஆரம்பகால உறுப்பினர்களாக இருந்ததை உறுதிப்படுத்தும்வகையில் பழைய உறுப்பினர் அட்டை இருந்தால் அதன் எண்ணைக் குறிப்பிட வேண்டும். இல்லையேல் 72 ம் ஆண்டு எந்த ஊர்கிளையில் உறுப்பினராகச் சேர்ந்தார் என்பதைத் தெரிவிக்க வேண்டும,

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை—14
8-3-83

## மீனவர் கோரிக்கை: அமைச்சர் விளக்கம்

சென்னை, மார்ச் 8— சட்ட மேலவையில் கேள்வி ஒன்றிற்கு கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பதிலளித்துக் கூறியதாவது:-

கல்வி கொள்கை மற்றும் அரசு பணிகளில் மீனவர்களுக்கு 10 சதவீதம் ஒதுக்கீடு வேண்டும் என்று மீனவ சமுதாயத்தினரிடமிருந்து கோரிக்கை வந்துள்ளது. இந்த கோரிக்கை பற்றி ஆய்வு செய்ய தமிழக அரசு ஒரு குழுவை நியமித்துள்ளது.

உச்ச நீதி மன்றத்தின் ஆணைக்கு இணங்க தமிழ் நாடு அரசு பிற்பட்டோர் பட்டியலை ஆய்வுசெய்து தொகுக்க இரண்டாவது பிற்பட்டோர் நலக்குழுக்களை ஓய்வு பெற்ற இந்திய அரசுப் பணி அதிகாரியும், தமிழ் நாடு தேர்வாணைக் குழுவின் முன்னாள் தலைவருமான கே. ஏ. அம்பா சங்கர் தலைமையில் அமைக்கப்பட்டுள்ளது.

இந்தக்குழு தனது அறிக்கையை ஓராண்டிற்குள் அரசிற்கு சமர்ப்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப் பட்டிருக்கிறது. இந்த குழுவின் பரிந்துரைகளை ஆய்வு செய்த பின் அரசு அவற்றின் மீது முடிவு எடுக்கும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

இ. காங்கிரசுககு நாவலர் மறுப்பு

## சென்னை நகருக்கு கிருஷ்ணா நதி நீர்: முயற்சி தொடர்கிறது

சென்னை, மார்ச். 8- சென்னைக்கு ஆந்திராவில் இருந்து குடிநீர் கொண்டு வர கழக அரசு தொடர்ந்து முயற்சிகளை மேற்கொண்டுள்ளது என நிதியமைச்சர் நாவலர் கூறினார்.



சட்டசபையில் நிதி நிலை அறிக்கை மீது சுந்தரராஜன் (இ. காங்கிரஸ்) பேசுகையில் சென்னைக்கு குடிநீர் கொண்டு வரும் திட்டத்தில் தமிழக அரசு அக்கறை காட்டவில்லை எனக் கூறினார்.

அதை மறுத்து அமைச்சர் நாவலர் கூறியதாவது:—

சென்னைக்குகிருஷ்ணா நதிநீர் கொண்டு வருவது குறித்து முன்பே ஆந்திர அரசுடன் பேச்சு வார்த்தை நடத்தி இருக்கிறோம்.

வெங்கட்ராம் முதல்வராக இருந்த போது அவரிடம் முதல்வர் புரட்சித்தலைவர் பேச்சு நடத்தியுள்ளார்.

அஞ்சய்யா விடமும் பேசியுள்ளோம்.

இப்போது அதிகாரிகள் மட்டத்தில் பேச்சுநடத்தி ஓரளவுக்கு முடிவுஎடுக்கப் பட்டுள்ளது.

இப் பிரச்சனையில் அரசுக்கு அக்கறை இல்லை எனக் கூறுவது தவறானது.

தொடர்ந்து இந்த அரசு முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

பொதுச் செயலாளர்

## ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தோர்

சென்னை, மார்ச் 8— நீலகிரி மாவட்டம் குன்னூர் முன்னாள் நகர மன்ற உறுப்பினரும் தற்போது குன்னூர் 5 வது வட்ட தி.மு.க. செயலாளருமாக இருந்து வந்த கே.ஜி.சாமி, கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் நேற்று கழகத்தில் இணைந்தார். மற்றும் இருதய சாமி டேவிட், (குன்னூர் 6 வதுவட்ட தி. மு. க. செயலாளர்) ஜே. அரிகிருஷ்ணன் (இடப்பள்ளி தி. மு. க. செயலாளர்) நீலகிரி மாவட்ட சிவாஜி ரசிகர் மன்ற செயலாளரும் இளைஞர் இந்திரா காங்கிரஸ் செயலாளருமான கே. சந்திரன், பி. மகாலிங்கம் டி. ஜெயராக [கிளன்டேன் எஸ்டேட் மேலாளர்] ஆகியோரும் பொதுச செயலாளர் ப. உ. ச. முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

மாவட்ட துணை செயலாளர் வர்கீஸ், கல்வி ராஜன், பொன்ராஜன், கண்ணன் ஆகிய கழகத் தோழர்கள் அப்போது உடனிருந்தனர்.

ராமேஸ்வரம் மேம்பாட்டு திட்டத்துங்கு

## நிதியுதவி பற்றி மத்ய அரசு மவுனம்: ஆர். எம். வீ. புகார்

சென்னை, மார்ச். 8 ராமேஸ்வரம் மேம்பாட்டுத்திட்டத்துக்கு நிதியுதவியளிப்பதுபற்றி மத்திய அரசு பதில் கூறாமல் இருந்து வருவதாக அமைச்சர் ஆர்.எம.வீ. கூறினார்.

சட்டசபையில்ஒருகேள்விக்குப் பதில் அளிக்கையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது!

குற்றாலத்தில் நடுத்தர பயணிகள் வசதிக்காக சுற்றுலாத்துறை ரூ. 7.97 லட்சத்தை நகரியத்திற்கு ஒதுக்கியுள்ளது.

இந்தத் தொகையைப் பயன் படுத்தி ஒன்றியம் 100 படுக்கை வசதி கொண்ட ஒரு துயிலக விடுதியை அமைத்து நடத்த ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

இந்தவிடுதியை அமைப்பதற்கான இடம் தேர்வு செய்யப்பட்டுள்ள தாகத் தெரிகிறது.

### இட நெருக்கடி

சீசன் நேரத்தில் அதிகமான பயணிகள் வருவதால் இட நெருக்கடி ஏற்படுவதைத் தடுக்கும் முறையில் கட்டிடங்களாகவே கிடைத்தால் அதை விலைக்கு வாங்க அரசு யோசனை தெரிவித்துள்ளது.

பெரியார் மாவட்டத்தில் பவானி—காவிரிஆறு கூடுகின்ற இடமான கூடுதுறையை முதல்கட்டமாகமாவட்ட சுற்றுலா மையமாக்கும் திட்டம் அரசின் பரிசிலனையில் உள்ளது.

இதற்காக அமைக்கப்பட்ட குழு தனது அறிக்கையை அரசுக்குக் கொடுத்துள்ளது.

ரூ. 35 லட்சம் செலவில் இந்தப்பகுதியை அபிவிருத்தி செய்வதற்காக அறிக்கை தந்து இருக்கிறார்கள்.

இதைப்பல்வேறு துறைகளின் மூலம் செய்யப்படுவது பற்றி அரசு பரிசிலனை செய்து வருகிறது.

சுற்றுலா மற்றும் ஒருங்கிணைந்த முறையில் ராமேசுவரம் மேம்பாட்டுப் பெருந்திட்டம் ஒன்றை தமிழக அரசு தீட்டியுள்ளது.



1982-83 ஆண்டின்

## சிறந்த தலைவியாக பிரதமர் இந்திரா தேர்வு

புதுடெல்லி, மார்ச் 8— 1982—83 ம் ஆண்டின் சிறந்த தலைவியாக பிரதமர் இந்திரா காந்தி தேர்தெடுக்கப்பட்டுள்ளார்.

தேசிய ஒற்றுமை, அசெப்பிளியால் மனித உரிமைகளுக்காகவும் உலக நாடுகளிடையே ஒற்றுமையுணர்வை மேம்படுத்த சிறந்த பணியாற்றியதற்காவும் பிரதமர் இந்திரா சிறந்த தலைவியாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

## புதிய வேளாண்மை கல்லூரி எங்கே அமையும்?

சென்னை, மார்ச். 8. சட்ட சபையில் கழக உறுப்பினர் திருமாறன் கேள்விக்கு பதில் அளிக்கையில் அமைச்சர் காளிமுத்து கூறியதாவது:—

தமிழ்நாட்டில் இன்னும் ஒரு வேளாண்மைக் கல்லூரி அமைக்கும் கருத்துரு அடங்கிய செயறகுறிப்பு அரசின் பரிசீலனையில் உள்ளது.

கல்லூரி அமைப்பதற்கான சாத்தியக் கூறுகள் எந்த இடத்தில் இருக்கிறது என்பதைஆராய்ந்து தான் முடிவு எடுக்க இயலும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.



## கைத்தறி துணிகளை மத்யஅரசுதுறையினர் வாங்கவேண்டும்

### மேலவையில் அனகாபுத்தூர் ராமலிங்கம் வலியுறுத்தல்

சென்னை. மார்ச். 8- மத்திய அரசின் அனைத்துத் துறைகளிலும் கைத்தறித் துணிகள்வாங்கப்பட வேண்டும் என்று கழக உறுப்பினர் அனகாபுத்தூர் ராமலிங்கம் சட்ட மேலவையில் வலியுறுத்தினார்.

தமிழக அரசு1983-84ம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கைமீதானவிவாதத்தில் கலந்து கொண்டு கழக உறுப்பினரும் கோ ஆப் டெக்ஸ் நிறுவனத்தின் ஆலோசனை குழுத்தலைவருமான அனகாபுத்தூர் ராமலிங்கம் பேசினார்.



அவர் கூறியதாவது: தமிழகத்தில் 5 லட்சத்து 56 ஆயிரம் தறிகள் உள்ளன இவற்றில்பணியாற்றும் சுமார் 14 லட்சம் நெசவாளர்களுக்கு இந்தஅரசு நல்ல பல வசதிகளை செய்து வருகிறது. பிற்கால வாழ்க்கைக்கு தேவைப்படும் எல்லா வசதிகளையும் மேலும் செய்ய வேண்டும் என்று நான் இந்த நேரத்தில கேட்டுக் கொள்கிறேன்.

கைத்தறி துணிகளின் விற்பனை மூலம் ஆண்டொன்றுக்கு 120 கோடி ரூபாய் வருவாய் ஏற்படுத்த வசதியுள்ளது. வறட்சி நிலைமையில் இந்த ஆண்டு 70 கோடி ரூபாய் வரைதான் வருமானம் வந்துள்ளது. கைத்தறி துணிகளை மத்திய அரசு அனைத்து துறையினரும் வாங்க வேண்டும். இதற்கான உத்தரவுகளை மத்திய அரசு பிறப்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன், மத்திய அரசு ஊழியர்கள் கைத்தறி துணிகளை ஆர்வத்துடன வாங்கி பயன பெற வேண்டும்.

### பிரதமருக்கு கடிதம்

இதுகுறித்து நான் பிரதமர் இந்திராகாந்திக்கும் கடிதம் எழுதியுள்ளேன்.

கைத்தறிக்கு என்று சில ரகத்துணிகளை மத்திய அரசு ஒதுக்கவேண்டும். அப்படி ஒதுக்கப்பட்ட துணிகளை விசைத்தறிகளோ அல்லது ஆலைகளோ உற்பத்தி செய்யக் கூடாது, 75 கோடி மீட்டர் கைத்தறிக்கு

(6-ம் பத்தி பார்க்க)

## முன்னாள் கேரள கவர்னர் ஜோதி அம்மாள் உடல் நலம்: முதல்வர் புரட்சித்தலைவர் விசாரித்தார்

சென்னை. மார்ச் 8. கேரள மாநில முன்னாள் ஆளுநர் ஜோதிஅம்மாள் ரத்தவாந்தி எடுத்ததையடுத்து சென்னை பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு தீவிர சிகிச்சைக்குப் பின் குணமடைந்து வருகிறார்.

ஜோதி அம்மாளை நேற்று முதல்வர்புரட்சித் தலைவர் சென்னைபொது மருத்துவமனை சென்று பார்த்து உடல்நலம் விசாரித்தார். பின் முதல்வர் இந்திய கம்யூனிஸ்ட்தலைவர் கல்யாணசுந்தரம், மற்றும் கழக எம்.எல்.ஏ. அப்துல் ரசாக் ஆகியோரையும் சந்தித்து உடல் நலம் விசாரித்தார்.

முதல்வருடன் அமைச்சர் அண்டேயும்வந்தார்.

மின்பாதையில்

## செப்பு கம்பிக்கு பதில் அலுமினிய கம்பி

சென்னை, மார்ச். 8— சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது பதிலளிக்கையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:

மானா மதுரை— பரமக்குடி மின்பாதையில் இருமுறை செப்புக்கம்பிகள் திருடு போனது குறித்து மானாமதுரை காவல் நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது.

இது தொடர்பாக போலீசார் நடவடிக்கை எடுத்துள்ளார்கள்.

மின் தொடர்பு பாதையில் செப்புக கம்பிகள் போடுவதை தவிர்த்து அலுமினியக் கம்பிகள் தான் போட வேண்டுமென உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே போடப்பட்டுள்ள செப்புக் கம்பிகள் அகற்றப்பட்டு அங்கே அலுமினிய கம்பிகள் போடப்படுகின்றன.

செப்புக்கம்பிகள் எல்லாம் மேட்டுப்பாளையத்தில் சேமிக்கப்பட்டு வருகின்றன.

கோதையாற்றில் உள்ள மின்சக்திநிலையம் 100 மெகாவாட் மின் சாரத்தை உற்பத்தி செய்கிறது.

இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கு ரூ. 2016 லட்சம் செலவானது.

கோதையாறு மின் நிலையம் ஒன்றில் மின் உற்பத்திச் செலவு ஒரு யூனிட்டுக்கு 7.75 காசாகவும் மின்நிலையம் இரண்டில் 9.02 காசாகவும் உள்ளது

மின்சாரத்தின் விலை மின் நிலையத்தைப் பொறுத்து அல்லது வாரியத்தின் வரவு செலவுகளைப் பொறுத்து நிர்ணயிக்கப்படுகிறது. இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.



## மத்திய அரசு அனுமதி தேவை இல்லை

இத்திட்டத்தை செயல்படுத்த மத்திய அரசின் அனுமதி தேவை இல்லை. எனவே மத்திய அரசின் அனுமதி கேட்கப்படவில்லை, ஆனால் இம் மேம்பாட்டு திட்டத்தின் சில பகுதி திட்டங்களை செயல்படுத்த மத்திய அரசிடம் இருந்து நிதி உதவி கேட்கப்பட்டுள்ளது.

இதற்குப் பதில் இது வரை கிடைக்கப்படவில்லை.

இந்த மேம்பாட்டு திட்டத்தை ஒரு ஐந்தாண்டு திட்டங்களின் மூலம் நிறைவேற்ற அரசு முடிவு செய்துள்ளது.

இந்தப் பெருந் திட்டத்தைச் செயல் படுத்துவதன் மூலம் பிற்பட்ட மாவட்டமான ராமநாதபுரத்தில் ஒருங்கிணைந்த முன்னேற்றத்திற்கு உதவும். ஆகையால் நிதிநிலைக்கு ஏற்றவாறு மேம்பாட்டுத திட்டத்தை எல்லாத் துறைகளும் செயல் படுத்த வேண்டும் என அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

சம்பந்தப்பட்ட துறைகளின் மூலம் திட்டங்கள் படிப்படியாக நிறைவேற்றப் படுகின்றன.

இது ரூ. 28 கோடி செலவிலான பெருந் திட்டம் என்பதால் மத்திய அரசின் நிதி உதவியைக்கேட்டு இருக்கிறோம்.

மத்திய அரசு கொடுக்காவிட்டால் கூட அவர்கள் உலக வங்கியிடம் இருந்து தொகையைப் பெற்றுத் தரலாம்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

அமைச்சர் ராஜேந்திரன் தகவல்:

## வறட்சி நிவாரண பணிகள் பற்றி எந்த புகாருமில்லை

சென்னை, மார்ச் 8. வறட்சி நிவாரணப் பணிகள் எந்தக் குறையும் இன்றி நல்ல முறையில் நடைபெறுகின்றன. அதுபற்றிப் புகார் எதுவும் வரவில்லை என அமைச்சர் ராஜேந்திரன் கூறினார்.

நிதி நிலை அறிக்கை மீது சட்ட சபையில் நடந்த விவாதத்தில் சுந்தரராஜன் (இ காங்) கூறிய புகார்களை மறுத்து அமைச்சர் ராஜேந்திரன் கூறியதாவது:—

வறட்சி நிவாரணப் பணிகளை பொதுப்பணித் துறைதான் கவனித்து வருகிறது.

இந்தப் பணிகளை டெண்டர்விட்டு ஒப்படைத்ததனால் காலதாமதம் ஆகிறது என உறுப்பினர் சுந்தரராஜன் கூறியது தவறான தகவல் ஆகும்.

டெண்டர் விடுவது கிடையாது. புதுக்கோட்டை செங்கல்பட்டு ஆகிய மாவட்டங்களிலும பணிகள் நல்ல முறையில் நடக்கின்றன இது பற்றி அரசுக்கு எந்தப் புகாரும் வரவில்லை.

இவ்வாறு அமைச்சர் ராஜேந்திரன் கூறினார்

## லாரி மோதி வாலிபர்சாவு

சென்னை, மார்ச் 8— சென்னை பல்லாவரத்தைச் சேர்ந்தவர் முருகன் (வயது 19) இவர் அப்பகுதியில் எலக்ட்ரீஷியனாக வேலை பார்தது வருகிறார். நேற்றுமாலை வேலை முடித்துக் கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருககும் போது பல்லாவரம் அருகேஎதிரே வந்த லாரி ஒன்று மோதியதால் அதே இடத்தில் அவர் பிணமானார். இது குறித்து பல்லாவரம் போலீசார் விசாரணை நடத்தி வருகின்றனர்,

(1 ம் பத்தி தொடர்ச்சி) ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த அளவு 100 கோடியாக உயர்த்தப்பட வேண்டும்.

சுதந்தரமான தொழில் செய்ய 40 ஆயிரம் நெசவாளர்களுக்கு புரட்சித் தலைவர் அரசு தலா 2 ஆயிரம் ரூபாய் கடன் உதவி செய்து வருகிறது.

இவ்வாறு அனகாபுத்தூர் ராமலிங்கம் பேசினார்.



## தமிழகத்துக்கு மத்ய குழு வருவதாக முன் அறிவிப்புமில்லை- குழுவை வரவேற்க மறுக்கவுமில்லை

### மத்திய அமைச்சருக்கு நாவலர் மறுப்பு

சென்னை. மார்ச். 8- தமிழ்நாட்டிற்கு மத்திய குழு வருவதாக முன்பு அறிவிப்பு ஏதும் வரவுமில்லை அதை வரவேறக முடியாது என்று நாங்கள் சொல்லவுமில்லை என்று நிதி அமைச்சர் டாக்டா நாவலர் சட்ட சபையில் கூறினார்.

சட்ட சபையில் நிதி நிலை அறிக்கை மீது துரைமுருகன் (தி.மு.க.) பேசும்போது மத்திய நிபுணர் குழு வறட்சி தொடங்கிய உடனேயே தமிழகத்திற்கு வர இருந்ததாகவும் ஆனால் தமிழக அரசு அதனை வரவேற்க முன் வரவில்லை என்றும் நாடாளுமன்றத்தில் மத்திய மந்திரி ராவ் பீரேந்திரசிங் கூறியிருக்கிறார். இவ்வாறு அரசு மெத்தனமாக இருக்கலாமா என்று குறிப்பிட்டார்.

இதற்கு பதிலளித்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:-

தமிழகத்திற்கு மத்திய குழு வருவதாக முன்பு எந்த தகவலும் தமிழக அரசுக்கு வரவில்லை.

எனவே அந்தக்குழு வர வேண்டாம் என்றும் நாங்கள் கூறவில்லை. இப்போது மத்திய குழுவை அனுப்பியிருக்கிறார்கள். இது கூட எங்களிடம் கேட்டு தேதி நிர்ணயம் செய்து கொண்ட பின் தான் இந்தக்குழுவை அனுப்பியுள்ளனர்.

எனவே முன்னதாக மத்தியக்குழு வர இருந்தது என்று கூறுவது தவறான தகவல். அந்த குழுவை வர வேண்டாம் என்றும் நாங்கள் கூற வில்லை.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

'வேன்' களுக்கு

## சுற்றுலா வாடகை சீருந்து அனுமதி

சென்னை, மார்ச். 8— சட்ட சபையில் கழக உறுப்பினர் வெங்கட சுப்பிரமணியம் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

மட்டாடர் மற்றும் ஸ்டாண்டர்டு 20 முடு வண்டிகளுக்கு சுற்றுலா வாடகை சீருந்து அனுமதி அளிப்பது குறித்து அரசு பரிசீலித்து ஆணை பிறப்பித்துள்ளது.

அதன்படி ஓட்டுநர் நீங்கலாக 6 பயணிகள் இருக்கை கொண்ட மட்டாடர் மற்றும் ஸ்டாண்டர்டு 20 முடு வண்டிகளுக்கு சுற்றுலாவாடகை சீருந்துவாக அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

பஸ் கட்டண உயர்வைக்கண்டித்து

## கேரள சட்டசபையில் எதிர்க் கட்சிகள் வெளிநடப்பு

திருவனந்தபுரம், மார்ச் 8— கேரள அரசின் உத்தேச பஸ் கட்டண உயர்வை ஆட்சேபித்து கேரள சட்ட சபையில் இருந்து எதிர்க் கட்சி உறுப்பினர்கள் அனைவரும் வெளி நடப்பு செய்தனர்.

முன்னதாக பஸ் கட்டண உயர்வு 12-ந் முதல் அமுலுக்கு வரும் என கேரள போக்கு வரத்து அமைச்சர் கே. கே. பாலகிருஷ்ணன் கூறினார்.

# 41 லட்சம் மக்கள் பயன்பெற சாலைகள் சீரமைப்புத் திட்டம்

**சென்னை, மார்ச். 8- நாலாயிரம் கிராமங்களில் வசிக்கும் 41 லட்சம் மக்கள் பயனடையும் வகையில் சாலைகள் சீரமைக்கப்பட இருப்பதாக தமிழக பட்ஜெட்டில் தெரிவிக்கப்பட்டுள்ளது.**

இதுபற்றி பட்ஜெட்டில் கூறப்பட்டிருப்பதாவது:

ஏராளமான பயணிப் பேருந்துகளைச் செயல்படுத்து வதினின்று கிடைத்த சிறப்பான, பல தரப்பட்ட அனுபவத்தைக் கொண்டு, ஆலோசனை நல்கும் தனிப்பட்ட நிறுவனம் ஒன்றை ஏற்படுத்துவதென அரசு கருதுகிறது.

## போக்குவரத்து ஆலோசனைக் கழகம்

இந்தியாவிலுள்ள பிற மாநிலங்களுக்கு மட்டுமின்றி, வளர்ச்சியுறும் பிற நாடுகளுக்கும் பேருந்துப் போக்குவரத்துத் தொழில் நுட்பவியலில் ஆலோசனை நல்க வேண்டி, பல்லவன் போக்குவரத்து ஆலோசனைக் கழகம் வெகு விரைவில் செயல்படத் தொடங்கும்.

இது பல்லவன் போக்குவரத்துக் கழகத்தின் ஒரு பகுதியாகச் செயல்பட்டு வந்த காலத்திலும் நமது நாட்டிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் வரும் வேண்டுகோளின் அடிப்படையில் போக்குவரத்து துறையில் இதுபல ஆய்வுகளை மேற்கொண்டுள்ளது.

## டீசல் விலை உயர்வு

போக்குவரத்துக் கழகங்கள் மிகச் சிறந்த முறையில் செயல்பட்டு வந்துள்ள போதிலும் மத்திய அரசு டீசல் எண்ணெய் விலையை 1983-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 15-ஆம் நாள் முதல் மேலும் உயர்த்தியுள்ளதால் ஓராண்டில் ஏறக்குறைய ரூ 9 கோடி அளவுக்குக் கூடுதல் செலவு ஏற்படுமெனத் தோன்றுகிறது. தொடர்ந்து சிறந்த முறையில் செயல்பட்டு வர எல்லா வகையான முயற்சிகளையும் இக் கழகங்கள் மேற்கொள்ளும்.

இம்மாநிலத்தின் சமூக-பொருளாதார ஒட்டு மொத்த வளர்ச்சியில் சாலைகளையும், சாலை போக்குவரத்து அமைப்பையும் மேம்படுத்துவதன் முக்கியத்துவத்தை வலியுறுத்த வேண்டிய அவசியமில்லை. மக்களின் 80 சதவீதத்தினர் கிராமங்களில் வசிப்பதால், ஐந்தாவது, ஆறாவது திட்டக் கால அளவில் கிராமங்களின் சாலை மேம்பாட்டுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு, கிராமங்களில் சாலைகளின் சீரமைப்பு படிப்படியான முறையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## பயனடையும் மக்கள்

கிராம சாலைகள் திட்டத்தின் கீழும் பேருந்து வழித் தடத்தை மேற்கொள்ளும் திட்டத்தின் கீழும் நடப்பு நிதியாண்டில் ரூ. 10 கோடி செலவில் 500 கிலோமீட்டர் கிராம சாலைகள் சீரமைக்கப்படும். இதனால், 320 கிராமங்களில் வசிக்கும் 4.50 லட்சம் மக்கள் பயனடைவர்.

பேருந்துவழித்தடத்தை மேற்கொள்ளும் திட்டத்தின் கீழ் ரூ. 29 கோடி செலவில் நடப்பு நிதியாண்டு முடிவுக்குள் ஏறக்குறைய 8,103 கிலோ மீட்டர் சாலைகள் சீரமைக்கப்படுமென எதிர் பார்க்கப்படுகிறது.

## பல்வேறு ஆய்வுப்பணிகள்

இதனால் 4.052 கிராமங்களில் வசிக்கும் 41.34 லட்சம் மக்கள் பயனடைவர். 1982 நவம்பர் திங்கள் வரையில் 25 ஆண்டுகள் பயனுள்ள வகையில் பணியாற்றித் தொடர்ந்து செயற்பட்டு வருகிற 'நெடுஞ்சாலை ஆராய்ச்சி நிலையம்' சாலை அமைப்பு தொடர்பாகப் பல்வேறு ஆய்வுப் பணிகளைக் கைவசம் வைத்துள்ளது.

இடைத்தர துறைமுகங்கள், சிறு துறைமுகங்கள் மேம்பாடு அரசின் கவனத்தைப்பெற்று வருகிறது. கடலூர் துறைமுகத்தில் அடிப்படை வசதிகளை அடுத்த நிதியாண்டில் மேம்படுத்தவும் கருதப்பட்டுள்ளது.

குளச்சல்துறைமுகத்தை மேம்படுத்தவும், வாலிநோக்கத்தில சிறு துறைமுகத்தை உப்பு ஏற்றுமதிக்காக ஏற்படுத்தவும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இத்திட்டம் அடுத்த நிதியாண்டில் நடைமுறைக்குக் கொண்டுவரப்படும்.

இவ்வாறு தமிழக பட்ஜெட்டில் கூறப்பட்டுள்ளது.



அமைச்சர் கோமதி சீனிவாசன் தகவல்

## பசு வதை தடுப்புச் சட்டம்

சென்னை, மார்ச், 8— தமிழக அரசு விரைவில் பசுவதை தடுப்புச் சட்டத்தைக் கொண்டு வரும் என சமூக நலத்துறை அமைச்சர் கோமதிசீனிவாசன் கூறினார்.

மகாவீர் அகிம்சா பிரச்சாரசபை நிகழ்ச்சி ஒன்றில் பேசுகையில் அவர் இதைத் தெரிவித்தார்.

# தமிழகத்தில் அனைத்து மாவட்டங்களிலும் அவசர சிகிச்சை வசதி

**சென்னை, மார்ச். 8- விபத்து அவசர கால சிகிச்சை வசதிகள் தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களுக்கும் விரிவு படுத்தப்படும் என்று தமிழக அரசு அறிவித்துள்ளது.**

இது குறித்து தமிழக பட்ஜெட்டில் கூறப்பட்டிருப்பதாவது:—

கிராமப் பகுதிகளில் நல்வாழ்வு வசதிகள் மக்களுக்குக் கிடைக்கச் செய்வது அரசின் கொள்கையாக இருந்து வருகிறது. இந் நோக்கத்தைக் கருத்திற் கொண்டு, கூடுதலாகத் தொடக்கச் சுகாதார நிலையங்களைத் தொடங்குவது தற்போதுள்ள நிலையங்களின் தரத்தை உயர்த்துவது என்னும் கொள்கையை அரசு கடைப்பிடித்து வருகிறது.

ஆறாவது ஐந்தாண்டுத் தொடக்கத்திலிருந்து கூடுதல் தொடக்கச் சுகாதார நிலையங்கள் 22 தொடங்கப் பட்டுள்ளன. அடுத்த நிதியாண்டில் மேலும் 15 தொடக்கச் சுகாதார நிலையங்கள் தொடங்குவதென்று கருதப்பட்டுள்ளது.

1980ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல் நாள் அன்றுள்ளபடி, 385 தொடக்கச் சுகாதார நிலையங்கள் இயங்கி வருகையில், அடுத்த நிதியாண்டு முடிவுக்குள், 422 தொடக்கச் சுகாதார நிலையங்கள் இருக்கும். வட்ட மருத்துவ மனைகளில் கிடைக்கப் பெறுகிற சிகிச்சை வசதிகளின் தரத்தினைக் கிட்டத் தட்ட எட்டுமளவுக்கு தொடக்கச் சுகாதார நிலையங்கள் சிலவற்றில் தற்போதுள்ள வசதிகளைத் தரப்படுத்தவும் திட்டமிடப்பட்டுள்ளது.

## அறுவை சிகிச்சை வசதி

1983-84 ல் 12 தொடக்கச் சுகாதார நிலையங்களில் அறுவை மருத்துவக் கூடவசதிகளுக்கு வகை செய்யவும் கருதப்பட்டுள்ளது.

1983-84-ல் ரூ 40 லட்சம் செலவில் 50 படுக்கை கொண்ட மருத்துவ மனை ஒன்று சத்திய மங்கலத்தில் கட்டப்படும். 50 படுக்கையேனும் இருக்கிற வகையில் வட்ட மருத்துவ மனைகளில் கூடுதல் படுக்கைகளுக்கு அனுமதி அளிப்பதென்கிற கொள்கை முடிவையும் அரசு எடுத்துள்ளது.

மாவட்டங்கள் அனைத்திலும் விபத்து - அவசர கால சிகிச்சை பணிக்கு வகை செய்யும் பெரிய திட்டம் ஒன்று சில ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்டது. இத்திட்டம் படிப்படியாக எல்லா மாவட்டங்களுக்கும் விரிவு படுத்தப்பட்டு வருகிறது.

நடப்பு நிதியாண்டில் ரூ. 85.86 லட்சம் செலவில் இத்திட்டம் இரு மாவட்டங்களில் செயல்படுத்தப்படும். அடுத்த நிதியாண்டில் மேலும் 2 மாவட்டங்கள் இத்திட்டத்தின் கீழ் வரும்.

மருத்துவக் கல்லூரிகளையும், கல்லூரி இணைந்த மருத்துவமனைகளையும் மேம்படுத்துவதற்கென உள்ள கட்டிடத் திட்டத்திற்காக நடப்பு நிதியாண்டில் அரசு ரூ. 417.21 லட்சம் அனுமதி அளித்துள்ளது.

## மாணவியர் இல்லம்

1983-84-ல் மருத்துவ மாணவிகளுக்காக மாணவியர் இல்லங்கள் இரண்டு கட்டுவதென்று கருதப்பட்டுள்ளது. 1983-84-ல் ரூ. 60 இலட்சம் செலவில் சென்னை அரசினர் பொது மருத்துவமனையில், இதய நோயியல் துறைக்காக, கதீடரைசேஷன் ஆய்வுக் கூடம் ஒன்று புதிதாக அமைக்கப்படும்.

சித்தமுறை மருத்துவம் அரசிடம தனி ஆதரவைத் தொடர்ந்து பெற்று வருகிறது.

அடுத்த நிதியாண்டில் தொடக்க சுகாதார நிலையங்கள் 10ல் சித்த மருத்துவப் பிரிவுகள் தொடங்கப்படும். சித்த மருத்துவம்சார்ந்த அரிய ஓலைச் சுவடிகளை வாங்கவும், சித்த மருத்துவ வளர்ச்சிக் குழு பாட நூல்களை அச்சிடவும் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

பாளையங்கோட்டை, அரசினர் சித்தமருத்துவக் கல்லூரியில் மொத்தம் சுமார் ரூ.35 லட்சம் செலவில் பட்ட மேற்படிப்புத் தொகுதி, விலங்கு இல்லம், மருத்துவப் பிரிவு, சித்த மருத்துவ ஆராய்ச்சிப் பிரிவு ஆகியவற்றிற்கான கட்டிடங்கள் கட்டப்படும்.

## இலக்கை தாண்டி...

கடந்த நிதியாண்டில் குடும்ப நலத் திட்டத்தைச் சிறந்த முறையில் தமிழ்நாடு நிறைவேற்றியது. 1,82,200 கருத்தடை அறுவைச் சிகிச்சைகள் என்று திட்ட இலக்கு இருக்கையில், இவ்வரசு 1,88,828 கருத்தடை அறுவைச் சிகிச்சைகள் செய்து இலக்கினை விஞ்சியது.

நடப்பாண்டில், 2,82,000 கருத்தடை அறுவைச் சிகிச்சைகள் என்று இலக்கு உயர்த்தப்பட்டுள்ளது. இந்த இலக்கினை எய்த அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

ரூ. 9 இலட்சம் செலவில 30 "லேப்ராஸ் கோப்" கருவிகள் வாங்கப்பட்டுள்ளன. வழக்கப்படியான கருத்தடை அறுவை முறையுடன் ஒப்பிடுகையில இக் கருவி மூலம் செய்யும்கருத்தடை அறுவைச் சிகிச்சை விரைவில நடத்தப்படுகிறது.

இச்சிகிச்சை முறை இப்போது இம்மாநிலத்தில் பெரிதும் விரும்பப்படுகிறது. இது கருத்தடை அறுவை சிகிச்சை செய்து கொள்வோரின் எண்ணிக்கை கூடவும் வழி கோலுகிறது.

அடுத்த நிதியாண்டில் அரசு மேலும் சில "லேப்ராஸ் கோப்" கருவிகளை வாங்கக் கருதியுள்ளது.

மருத்துவம் மற்றும் பொதுசுகாதாரத்துறைக்காக அடுத்த நிதியாண்டில ரூ. 147.75 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு பட்ஜெட்டில் கூறப்பட்டுள்ளது.

## தொழில்பயிற்சி நிலையத்தில் புதிய வகுப்புகள்

சென்னை, மார்ச் 8— தொழில் பயிற்சி நிலையத்தில் புதிய வகுப்புகள் தொடங்கப்படுகின்றன.

இதுகுறித்து தமிழக பட்ஜெட்டில் கூறப்பட்டிருப்பதாவது:—

இம்மாநிலத்தில் 1979-80 லிருந்து 1982-83 வரையில் பல்தொழில் பயிற்சிப் பள்ளிகள் ஏறத்தாழ 29 தொடங்கப் பட்டுள்ளன.

தொலைக்காட்சிப் பெட்டி நுணுக்கங்கள் செப்பனிடுதல பற்றிய பாடமுறை. காகிதம் தயாரிப்பு, காகிதக்கூழ் தொழில் நுட்பவியல், செயற்கை இழைத் தொழில்நுட்பவியல் மின்னணுவியல் வண்ண ஓவியம் தீட்டுதல், வணிக ஓவியம் வரைதல் முதலியவற்றில் பட்டயப் பாடமுறைகள் அடுத்த நிதியாண்டில் பல்வேறு பல் தொழில் பயிற்சி நிலையங்களில் புதிதாக தொடங்கப்படும்.

அடுத்த நிதியாண்டில் கல்வித் துறைக்கு ரூ. 359.79 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு பட்ஜெட்டில் கூறப்பட்டுள்ளது.

வேதாரணியம்

அண்ணா விவசாய சங்க

## நிர்வாகிகள் தேர்வு

தஞ்சை, மார்ச் 8— வேதாரணியம் ஒன்றிய அண்டை துறை அண்ணா விவசாய சங்க அமைப்புக் கூட்டம் மற்றும் நிர்வாகிகள் தேர்வு சங்க தலைவர் இரணியன் தலைமையில் செயலாளர் இந்திரஜித் முன்னிலையில் நடைபெற்றது.

கூட்ட முடிவில் தலைவராக கே. வேதாசலம், செயலாளராக ஏ.இராமச்சந்திரன், பொருளாளராக கே. அன்பழகன், துணைத் தலைவராக எஸ். ராமையன், துணைச்செயலாளராக சரவணமுத்து, மற்றும் செயற்குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

முன்னதாக சண்முகவேலு, எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் க. பக்கிரிசாமி, ரங்கசாமி ஆகியோர் கூட்டத்தை துவக்கிவைத்து பேரவைக் கொடியை ஏற்றி வைத்தனர்.

சிறுசேமிப்பு திட்ட துணைத் தலைவர்

# எஸ். எஸ். ஆர். மலேசியா பயணம்: நாளை புறப்படுகிறார்



**சென்னை, மார்ச். 8. சிறுசேமிப்புத் திட்டத் துணைத் தலைவர் எஸ். எஸ். ஆர். எம். எல். ஏ, நாளை (9-ந் தேதி) மலேசியா செல்கிறார்.**

நாளை காலை 9 மணிக்கு சென்னையிலிருந்து விமானம் மூலம் அவர் புறப்படுகிறார்.

10-ந் தேதி கோலாலம்பூரில் பத்திரிகையாளர்களைச் சந்திக்கிறார். 11-ந் தேதி அங்கு பிரமுகர்களைச் சந்திக்கிறார்.

அறுவை சிகிச்சை மருத்துவ முகாம் கட்டவும், கலைக்கூடம் ஒன்று அமைக்கவும் 12ந் தேதி கோலாலம்பூரில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சியில் எஸ். எஸ். ஆர். பங்கேற்கிறார்.

13ந் தேதி கிள்ளானிலும், 14ந் தேதி சிரம்பானிலும் நிகழ்ச்சிகளில் பங்கேற்கும் எஸ். எஸ். ஆர் 15ந் தேதி முதல் 25ந் தேதி வரை அங்கு ஏற்பாடு செய்யப்படும் பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறார்.

26ந் தேதி பினாங்கிலும் 27ந் தேதி ஈப்போவிலும் 28ந் தேதி தைபிலிலும் எஸ். எஸ். ஆர். பல நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கிறார்.

ஏப்ரல் 2ந் தேதி தெலுங்கன்கர் என்ற ஊரில் எஸ்.எஸ்.ஆர். பேசுகிறார்.

மலேசியாவில் எஸ். எஸ் ஆர். பங்கேற்கும் நிகழ்ச்சிகளில் அமைச்சர்களும், முக்கியப்பிரமுகர்களும் கலந்து கொள்கிறார்கள்.

மலேசியா நிகழ்ச்சிகளை முடித்துக்கொண்டு சிங்கப்பூர், தாய்லாந்து ஆகிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து விட்டு 3 வார சுற்றுப் பயணத்தை முடித்து விட்டு எஸ். எஸ். ஆர். தமிழகம் திரும்புகிறார்.

## உபயோகத்திற்கு லாயக்கற்ற விமான டயர்களை விற்பனை செய்தல்

இடம்: தளவாடகிடங்கு தலேகான் தப்பாடி, பூனா-410506

பூனா தலேகான் தப்பாடியிலுள்ள தளவாடகிடங்கின் சால்வேஜ் செக்ஷனில் குவிந்து கிடக்கும் பல்வேறு அளவுகளில் உபயோகத்திற்கு லாயக்கற்ற விமான டயர்கள் சுமார் 30 மெட்ரிக் டன்கள் விற்பனை செய்வதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் வரவேற்கப்படுகின்றன. டெண்டர் கோரப்படும் தொகையில் 2 சதவிகிதம் தொகையை, டெண்டர்தாரர்கள் ரொக்கமாகவோ அல்லது தேஹூ சாலை பிராஞ்ச், ஸ்டேட்பாங்க் ஆப் இந்தியாவில் எடுக்கப்பட்ட கோடிட்ட டிமாண்ட் டிராப்ட்டாகவோ, கமாண்டன்ட், ஆர்டினன்ஸ் டெப்போ, தலேகான் தப்பாடி அவர்கள் சார்பில் எடுத்து செலுத்த வேண்டும். மேற்படி பொருட்களை வார நாட்களில் காலை 9 மணி முதல் 2 மணி வரை சனிக்கிழமைகளில் காலை 9 மணி முதல் 12 மணி வரை பரிசீலனை செய்து கொள்ளலாம். டெண்டர்கள் பதிவு தபால் மூலம் 1983, ஏப்ரல் 16-ம் தேதி மாலை 5 மணி வரை பெற்றுக் கொள்ளப்படும். மற்றும் டெண்டர்கள் நேரில் டெண்டர் பெட்டியில் போடுவதற்கான இறுதி தேதி 1983 ஏப்ரல் 18-ம் தேதி மாலை வரையாகும். டெண்டர்கள், டெண்டர்தாரர்கள் முன்னிலையில் கமாண்டன்ட் அலுவலகம், தளவாட டெப்போ, தலேகான் தப்பாடி, விலாசத்தில் 1983 ஏப்ரல் 19ம்தேதி காலை 10 மணிக்கு திறக்கப்படும். பொருட்களின் முழு விவரங்கள் மற்றும் இதர நிபந்தனைகள் அனைத்தையும் விண்ணப்பாரத்துடன் OIG சால்வேஜ் செக்ஷன் ஆர்டினென்ஸ் டெப்போ, தலேகான் தப்பாடி, அவர்களிடமிருந்து செட் ஒன்றுக்கு ரூ 10/-(திருப்பியளிக்கப்பட மாட்டாது) வீதம் ரொக்கமாகவோ அல்லது கோடிட்ட பாங்க் டிராப்ட் மூலம் செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம். பாங்க் டிராப்டை கமாண்டன்ட், ஆர்டினென்ஸ் டெப்போ, தலேகான் தப்பாடி, அவர்கள் சார்பில், தேஹூ ரோடு பிராஞ்ச்ஸ்டேட்பாங்க் ஆப் இந்தியாவிலிருந்து பெற்று அனுப்ப வேண்டும். கால தாமதத்தை தவிர்க்க டெண்டர்தாரர்கள் டெண்டர்களைவாங்கி நேரில் செலுத்துமபடி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.



திருச்சி மாவட்ட

# எம். ஜி. ஆர். மன்ற இளைஞர் அணி அலுவலக திறப்பு விழா

**திருச்சி, மார்ச். 8- திருச்சி மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற, எம். ஜி. ஆர். இளைஞர் அணி திறப்பு விழா வருகிற 13-ந் தேதி நடக்கிறது.**

திருச்சி கலெக்டர் ஆபீஸ்ரோடு, சங்கம் காலனியில் நடைபெறும் இந்த விழா 13-ந் தேதி ஞாயிறு மாலை 6மணிக்கு நடைபெறுகிறது.

## அமைச்சர் காளிமுத்து

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன் தலைமையில் நடைபெறும் இந்த விழாவில் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொதுச் செயலாளர் திருச்சி ஆர். சவுந்திரராஜன் வரவேற்புரையாற்றுகிறார். அமைச்சர் காளிமுத்து அலுவலகத்தைத் திறந்து வைக்கிறார்.

## படத்திறப்பு

பேரறிஞர் அண்ணாவின் திருவுருவப்படத்தை திருப்பூர் மணிமாறனும், புரட்சித்தலைவரின் திருவுருவப்படத்தை திருக்குறள் முனுசாமியும் திறந்து வைக்க, அண்ணா தொழிற் சங்கப் பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள் கழகக் கொடியை ஏற்றி வைக்கிறார்.

நெல்லை பாலாஜி, கழக சட்டமன்ற உறுப்பினர்கள் கே. சவுந்தரராஜன், பி. எஸ். கந்தசாமி, வரகூர் பெருமாள், எம்.கே. ராசமாணிக்கம், எம். சின்னச்சாமி, அண்ணாதாசன், அரங்கராசன், ராஜ்குமார், மற்றும் கரு. அன்புதாசன், ஜே. தேவதாஸ் ஆகியோர் பேசுகிறார்கள்.

## மறைவு

கோவைமாவட்ட சுகாதார அண்ணா தொழிலாளர்சங்கமாவட்ட பொதுச் செயலாளரும் வட கோவை பகுதி கழகச் செயலாளருமான ஆரா. கோவை முத்துவின் தாயார் புஷ்பம்மாள் கடந்த மாதம் 28-ந்தேதி அவரது இல்லத்தில் காலமானார். ஏராளமான கழகத் தோழர்களும், நண்பர்களும் இறுதி மரியாதை செலுத்தினர்.

ஒரிசா சட்டசபை:

## எதிர்க் கட்சிகள் வெளி நடப்பு

புவனேஸ்வரம் மார்ச் 8- ஒரிசா சிவில் சப்ளை கார்ப்பரேஷன் எண்ணெய் வாங்கியதில் ஊழல் நடந்திருப்பதாக கூறி ஒரிசாசட்டசபையில் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்தனர்.

ஆனால் சபாநாயகர் இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்திற்கு அனுமதி வழங்கவில்லை.

இதையடுத்து முன்னாள் முதலமைச்சர் நந்தினி சத்பதி உட்பட எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அனைவரும் சபையில் இருந்து வெளி நடப்பு செய்தனர்.

## தவணை முறையில் பாட்டரி

சென்னை, மார்ச் 8— பேஸ் செட்டார் என வழங்கப்படும் வில்லியர்ட் கம்பெனியின் தயாரிப்பான கார் பேட்டரியை வி. ஜி. பி. நிறுவனத்தார் தவணை முறையில் வழங்குகின்றனர்.

இதற்கான விழா வி. ஜி. பி. விக்டரி ஹவுசல் நடந்தது. அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு பாட்டரி தவணைமுறை கிட்டத்தை துவக்கிவைத்தார் விழாவில வி. ஜி. பன்னீர்தாஸ் வரவேற்புரையாற்ற வி. ஜி. சந்தோஷம் நன்றி கூறினார்.

சிறப்பான நிதிநிர்வாகம்:

# தமிழக அரசுக்கு ரிசர்வ் வங்கி கவர்னர் பாராட்டு

**சென்னை, மார்ச் 8- ரிசர்வ் வங்கியிடமிருந்து அதிகபற்றுக்கு தேவையில்லாமல் நிதி விவகாரங்களை நன்கு நிர்வகித்து வருவதாக தமிழக அரசுக்கு ரிசர்வ் வங்கி கவர்னர் பாராட்டு தெரிவித்துள்ளார்.**

ரிசர்வ் வங்கி கவர்னர் டாக்டர் மன்மோகன்சிங் நேற்றுமுதல்வர் புரட்சித் தலைவரைத் தலைமைச் செயலகத்தில் சந்தித்து 30 நிமிட நேரம் முதல்வருடன் உரையாடினார்.

பின் டாக்டர் மன்மோகன்சிங் நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:—

ரிசர்வ் வங்கியிடமிருந்து அதிக பற்றுக்கு தேவையில்லாமல் நிதி விவகாரங்களை தமிழக அரசு நன்கு நிர்வகித்து வருகிறது. இதற்காக தமிழக அரசை நான் பாராட்டுகிறேன். இந்தசீரியநிலையைமாநில அரசு (தமிழக அரசு) தொடர்ந்து நீடிக்கும் என்று நம்புகிறேன்.

இவ்வாறு டாக்டர் மன்மோகன்சிங் கூறினார்.

டாக்டர் மன்மோகன் சிங் முதல்வரை சந்தித்து 30 நிமிட நேரம் உரையாற்றினார். இந்த சந்திப்பின்போது நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமைச் செயலாளர் (பொறுப்பு) சொக்கலிங்கம் உணவு கூட்டுறவுத் துறை செயலர்கிருஷ்ணமூர்த்தி ஆகியோரும் உடனிருந்தனர்.

41-வது வட்டகழக

அவைத்தலைவர்

## கோவிந்தசாமி காலமானார்

சென்னை, மார்ச் 8— சென்னை, 41-வதுவட்ட கழக அவைத்தலைவர் பி.எஸ். கோவிந்தசாமி இருதய நோய் காரணமாக, நேற்றிரவு காலமானார். அவருக்கு வயது 62. இன்று 9ந் தேதி மாலை 6 மணிக்கு ஓட்டேரி மயானத்தில் இறுதி சடங்குகள் நடைபெறுகிறது.

வட்ட கழக செயலாளர் வெ. முத்தரசன் மற்றும் வட்ட கழக நிர்வாகிகள், உட்பட ஏராளமான கழகத்தவர்கள் கோவிந்தசாமி உடலுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர். இறுதி சடங்கில கழகத் தோழர்கள் அனைவரும் பங்கு கற்கும்படி வெ. முத்தரசன் கோரியுள்ளார்.

# அண்ணா தொழிற்சங்க பேரவை இணைப்பு சங்கங்கள் கவனத்திற்கு

இந்திய தொழிற்சங்க சட்டம் 1926 ன்படி பதிவு செய்யப்பட்டுள்ள ஒவ்வொரு தொழிற் சங்கமும் ஆண்டு தோறும் வரவு செலவு கணக்கு களை தணிக்கைசெய்து 'இ' படிவம் பூர்த்தி செய்து, தொழிற்சங்க கூடுதல் பதிவாளர் (தொழிலாளர் துறை துணை ஆணையர்) அவர்களுக்கு ஏப்ரல் மாதம் 30-ந் தேதிகுள் அனுப்பி வைக்க வேண்டு மென்பதையும் அவ்வாறு 'இ' படிவம் அனுப்பத் தவறினால் மேற்படி சங்கங்களின் பதிவு எண் ரத்து செய்யப்படும் என்பதையும் அறிவீர்கள்.

ஆகவே 1982-ம் ஆண்டுக்கான வரவு செலவு கணக்குகளை தணிக்கை செய்து தொழிற்சங்க கூடுதல் பதிவாளருக்கு 'இ' படிவம் இன்னும் அனுப்பாத சங்கங்கள் தாமதமின்றி 'இ' படிவம் பூர்த்தி செய்து அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

அண்ணா தொழிற்சங்கப் பேரவையில் இணைந் துள்ள ஒவ்வொரு தொழிற்சங்கமும் தொழிற்சங்க கூடுதல் பதிவாளருக்கு அனுப்பியுள்ள/அனுப்பப் படுகிற 'இ' படிவ நகலினை உடனடியாக பேரவைக்கு அனுப்பிவைக்க வேண்டுமென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வை. பெருமாள்
பேரவை பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா
திராவிட முன்னேற்றக் கழகம்

சென்னை—14
8—3—83

# அண்ணா தொழிற்சங்கப் பேரவை அறிவிப்பு

தொழிற்சங்க வளர்ச்சிப் பணிகள் குறித்து கீழ்க்கண்ட விவரப்படி பேரவை இணைப்பு சங்க பிரதிநிதிகள் கூட்டம் நடைபெறும். அந்தந்த மாவட்டத்திலுள்ள பேரவை இணைப்பு சங்கப் பிரதிநிதிகள் சங்கத்தின் குறிப்பேடு, உறுப்பினர் பதிவேடு, வரவு செலவு குறிப்பேடு ஆகியவற்றுடன் தவறாது கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

இவண்
வை. பெருமாள்
பேரவை பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா
திராவிட முன்னேற்றக்கழகம்

சென்னை-14
8-3-83

| தேதி | மாவட்டம் | கூட்டம் நடைபெறும் ஊர் |
|---|---|---|
| 13—3—83 | திருச்சி | திருச்சி |
| 14—3—83 | மதுரை | திண்டுக்கல் |
| 16—3—83 | முகவை | மதுரை |
| 22—3—83 | குமரி | நாகர்கோவில் |
| 23—3—83 | நெல்லை | திருநெல்வேலி |

குறிப்பு: கூட்டம் நடைபெறும் இடமும் நேரமும் மாவட்ட சங்கத்தின் மூலம் தெரிவிக்கப் படும்.

## கத்திவாக்கம் நகராட்சி நகரியம்

# மறு ஏல விளம்பரம்

**இந்நகரியக்குழு கூட்டப்பொருள் எண் 214 நாள் 3-3-83 மற்றும் கூட்டப்பொருள் எண் 215 நாள் 3.3-83**

1983-84ம் ஆண்டிற்கு கீழ்க்கண்டுள்ள குத்தகை களை 1983ம் ஆண்டு மார்ச் மாதம் 21ம் தேதி திங்கட் கிழமை காலை 10.00 மணிக்கு கத்திவாக்கம் நகரிய நிர்வாக அதிகாரி அவர்களால் அல்லது அவரது அங்கீகாரம் பெற்றவரால் பகிரங்கமாக பொது ஏலத் தில் விடப்படும். அதுசமயம் பொது ஏலத்தில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் இவ்வலுவலக 4-1-83ம் மற்றும் 9-2-83ம் தேதிகளில் விளம்பரப்படுத்தப்பட்ட விளம்பரத்தில் கண்டுள்ள பொது மற்றும் சிறப்பு நிபந்தனைகளுக்கும் உட்பட்டு பங்கு கொள்ளலாம்.

1983-84ம் ஆண்டிற்கு கீழ்க்கண்டுள்ள குத்தகை ஏலம் கேட்க 1983ம் ஆண்டில் பெறப்பட்ட சொத்து சான்றிதழ் கொடுத்து செலுத்தப்பட வேண்டிய முன் பிணைத் தொகை வருமாறு.

| வ. எண். | குத்தகை இனங்கள் | ஏலப் பொறுப்புத் தொகை |
|---|---|---|
| 1. | நகராட்சி நகரிய காந்தி நாளங் காடியில் உள்ள கடைகளில் கட்டணம் வசூலிக்கும் உரிமை (முன்பக்கக் கடைகள் 1 முதல் 6கடைகள் நீங்கலாக) | ரூ. 500/- |
| 2. | நகராட்சி நகரிய பேருந்து நிலையத்தில் பேருந்துகளிடம் கட்டணம் வசூலிக்கும் உரிமை. | ரூ. 100/- |
| 3. | நகராட்சி நகரிய பேருந்து நிலையகட்டணக்கழிப்பிடத்தல் கட்டணம் வசூலிக்கும் உரிமை. | ரூ 50/- |
| 4. | நகராட்சி நகரியத்திற்குச் சொந்தமான பனை மரங்களி லிருந்து வரும் பலனை அனு பவித்தல். | ரூ. 25/- |
| 5. | நகராட்சி நகரிய அலுவலக அருகாமையில் அமைந்துள்ள பாரதியார் நூற்றாண்டு நிறைவு கடைகள் புதியதாக கட்டப்பட்டுள்ள 2 (கடை எண் 2 மற்றும் 3)கடைகளில் வியாபா ரம் செய்யும் குத்தகை உரிமை. | ரூ. 500/-(கடை ஒன்றுக்கு |

(ஒம்) சீனி சம்பத்,
நிர்வாக அதிகாரி,
கத்திவாக்கம் நகராட்சி ஒன்றியம்

இடம்-சென்னை—7
நாள் 5-3 83

# மக்களை பட்டினி போடும் மத்திய அரசு: கம்யூனிஸ்ட் தாக்கு

சென்னை, மார்ச், 8 மத்திய அரசு மக் களைப் பட்டினி போடுகிறது, மாநில உரிமை களைக் காக்க மற்ற மாநில அரசுகளுடன் சேர்ந்து நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்று இந்திய கமயூனிஸட் கட்சி எம் எல் ஏ. கருப்பையா கூறினார்.

சட்ட சபையில் நிதி நிலை அறிக்கைமீது கருப் பையா (இந்திய கம்யூ னிஸ்ட்) பேசுகையில் கூறியதாவது:-

இலவச சத்துணவுத் திட்டத்தை கொண்டு வந்த உணர்வினைப் பாராட்டுகிறோம்.

ஏழைக் குழந்தைகள் பட்டினியாக கிடக்கக் கூடாது என்ற நோக்கத் தில் கொண்டு வரப்பட்ட திட்டம் இது.

அதே சமயத்தில் கிராம புறங்களில் வறுமையை ஒழிக்க தீவிர நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். மாநில அரசின் உரிமை களை மத்திய அரசு பறிக் கிறது.

உரிமைகளை பறிப்பதே அவர்களின் நோக்கம் உருப்படியாக எதையும் செய்ய விடாமல் மத்திய அரசு முட்டுக் கட்டை போடுகிறது.

[ஆ காங்கிரசார் குறுக் கீடு]

மத்திய அரசைப் பொறுத்தவரை மக்க ளைப் பட்டினி போட்டு சாகடிப்பார்கள். மாநில உரிமைகளைக் காக்க, மற்ற மாநில அரசு களுடன் சேர்ந்து நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட வேண்டும்.

இவ்வாறு கருப்பையா கூறினார்.

நடுநிலை நாடுகள்மாநாடு

## 2-ம் நாள் நிகழ்ச்சிகள்

புதுடெல்லி, மார்ச் 8—நடுநிலை நாடுகளின் 2-ம் நாள் கூட்டம் இன்று டெல்லி விஞ்ஞான் பவ னில் தொடர்ந்து நடந் தது.

இன்று மாநாட்டில் 15 நாட்டுத் தலைவர்கள் பேசுகிறார்கள். இரவு நடக்கும் கூட்டத்தில் 8 நாட்டுத் தலைவர்கள் பேசுகிறார்கள்.

மாநாட்டில் சமர்ப்பிக் கப்பட உள்ள அரசியல்— பொருளாதாரப் பிரகட னத்தின் முதல் 3 பிரிவு கள் தயாரிக்கப்பட்டு விட்டதாகவும் மற்ற பகுதிகள் தயாரிக்கப்பட்டு வருவதாகவும் தெரிவிக் கப்பட்டுள்ளது

## கடும் எச்சரிக்கை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி

இது போன்ற கோரிக்கை களை சம்பந்தப்பட்ட பகுதிப் பொறியாளர்களி டம் கொடுக்குமாறு கேட் டுக் கொள்ளப்படுகிறார் கள்.

ஆங்காங்கே நிறுவப் பட்டு இருக்கும் நீர்த் தொட்டிகளில் இரண்டாவது முறையும் நீர் நிரப்ப வேண்டி மற்றப் பகுதிகளுக்குச் செல்லும் குடிநீர் லாரி களை சிலர் தடுத்து நிறுத்துவதாகத் தெரி கிறது.

சென்னை குடிநீர் வாரியம் ஒவ்வொரு தொட்டிக்கும் குடிநீர் குறிப்பிட்ட நேரத்தில் நிரப்புவதற் குரிய வகையில் விரிவான ஏற்பாடுகளைச் செய் துள்ளது.

சிலர் இதுபோன்ற தவறுகளைச் செய்வதன் மூலம் மற்றப் பகுதி களுக்கு வாரியம் நிர்ணயித்தபடி குறித்த நேரத்தில் குடிநீர் வழங் கும் முறை பாதிக்கப் படுகிறது எனவே பொது மக்கள் அனைவரும் குழாய் மூலமாகவும் லாரி கள் மூலமாகவும் சென்னை நகர வாரி யத்தின் குடிநீர் வழங்கும் முறைக்கு பூரண ஒத் துழைப்பு அளிக்குமாறு கேட்டுக் கொள்ளப்படு கிறார்கள்.

இவ்வாறு அந்த அறிக் கையில் கூறப்பட்டுள் ளது.

## தமிழ்நாடு பிற்பட்டோர் நலக்குழு

# அறிவிக்கை

இதனால் பொது மக்களுக்கு அறிவிக்கப்படுவது யாதெனில் தமிழிலும், ஆங்கிலததிலும் அச்சிடப் பட்ட வினாப்பட்டியல்களின் நகல்கள் குழுவினிடம் உள்ளன. வினாப்பட்டியலுக்கு விடையளிக்க விருப்ப முள்ளவர்கள் குழுவுக்கு உடனே விண்ணப்பிக்கலாம்.

ஜெ. அ. அம்பாசங்கர், இ. ஆ. ப.(ஓய்வு)
தலைவர்

27, சர். சி. வி. இராமன் சாலை,
சென்னை—600018

DIPR 11644/83-5/MAC

இராயபுரம் 11-வது வட்டம் பொன்மனச் செம்மல் M.G.R. மன்றத்தின் சார்பில்

தலைமை நிலையச் செயலாளருக்கு

# பாராட்டுவிழா பொதுக்கூட்டம்

நாள்: 9-3-83 புதன் மாலை 7 மணி
இடம்: செயிண்ட் சேவியர் தெரு (ஜீவரத்தினம் நகர் காசிமேடு)
தலைமை: S. வாசு (ம. செ.)
முன்னிலை: P.குப்பன் (ம. த.) L.அமுல்தாஸ் (ம.பொ.)
வரவேற்புரை: இரா. சோமசுந்தரம் (ப. செ.) R. பான்ராஜ் (வ.செ.)

பாராட்டு பெறுவோர்:

**துரை. கோவிந்தராசன்**
(தலைமை நிலையச் செயலாளர்)

'தாய்' ஆசிரியர் வலம்புரிஜான் M.L.C.
அமிர்தராஜ் M.L.A. (திருச்செந்தூர்)

பாராட்டுவோர்:

மாண்புமிகு **அமைச்சர் டாக்டர் அண்டே**

திருவை அண்ணாமலை, E. மதுசூதனன், பா. வளர்மதி, தரங்கை கண்ணன், மு. வேதாசலம், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, வண்ணை சண்முகம், இரா. சண்முகம், K. ராஜேந்திரன், D. தேவராசு, D போஸ், கமலக்கண்ணன், S. ஜெயராமன், M.லட்சு மணன், D. நேரு, சுகுமாரன், B. குமரன், A.D. கிருஷ் ணன், D. சகாயராஜ், D. சுப்ரமணி, R.குணசேகரன், P.S. மணி.

நன்றியுரை: A. தாஸ்



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson Manickam Road Madras - 600 029.
Editor : E. PARASURAMAN